மூன்று இலக்க எண்கள் :

## பத்து இட இலக்கத்தை மாற்றிக் கழித்தல் :

**மாதிரி 9 :**

விடை என்ன ?

```
  3 4 5
− 1 2 6
```

$345 = 300 + 40 + 5 = 300 + 30 + 15$

$126 = 100 + 20 + 6 = 100 + 20 + 6$

$200 + 10 + 9 \quad 219$

விடை : 219

சுருக்கமாக

```
   [3][15]
  3 4̸ 5̸
− 1 2 6
  -----
  2 1 9
```

```
  3 4 5
− 1 2 6
  -----
  2 1 9  விடை.
```

## பயிற்சி 45

கழித்து விடை எழுதுக.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| □□ | □□ | □□ | □□ | □□ | □□ |
| 4 2 5 | 4 6 4 | 5 4 7 | 3 4 0 | 6 7 2 | 3 5 1 |
| − 1 1 8 | − 2 2 5 | − 2 2 9 | − 2 2 5 | − 2 4 4 | − 1 4 8 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| □□ | □□ | □□ | □□ | □□ | □□ |
| 2 6 5 | 4 3 0 | 3 4 2 | 2 7 2 | 3 6 0 | 3 4 6 |
| − 3 7 | − 2 8 | − 1 2 7 | − 2 5 | − 1 5 5 | − 2 2 9 |

மூன்று இலக்க எண்கள் :

நூறு, பத்து இட இலக்கங்களை மாற்றிக் கழித்தல் :

மாதிரி **10 :**

விடை என்ன ?

| | | | விடையைச் சரிபார் |
|---|---|---|---|
| | 3 16 / ~~4~~ 12 | | |
| 4 7 2 | ~~4~~ ~~7~~ ~~2~~ | 4 7 2 | 1 8 5 |
| − 1 8 5 | − 1 8 5 | − 1 8 5 | + 2 8 7 |
| | 2 8 7 | 2 8 7 விடை | 4 7 2 |

குறிப்பு : இலக்கங்களை மாற்றுவதைக் கூடுமானவரை மனதிலேயே செய்யப் பழகுக.

## பயிற்சி 46

விடை எழுதுக.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 263 | 241 | 327 | 442 | 225 | 334 |
| − 86 | − 64 | − 48 | − 73 | − 26 | − 75 |
| 223 | 332 | 420 | 374 | 550 | 328 |
| −148 | −165 | −135 | −199 | −292 | −269 |
| 305 | 407 | 505 | 201 | 206 | 105 |
| −167 | −259 | −278 | − 74 | −128 | − 37 |
| 210 | 400 | 300 | 600 | 700 | 500 |
| −125 | −218 | −117 | −409 | −295 | −265 |

## பயிற்சி 47

### (மனக்கணக்கு)

| | |
|---|---|
| 1. முருகன் கடைக்கு 10 ரூபாய் எடுத்துச் சென்றார். அதில் 8 ரூபாய்க்கு ஒரு வேட்டி வாங்கினார். அவரிடம் இருக்கும் மீதிப் பணம் எவ்வளவு ? | ——— ரூபாய் |
| 2. இரண்டு எண்களின் கூட்டுத் தொகை 12. அவற்றில் ஓர் எண் 10. மற்ற எண் எது ? | ——— |
| 3. பாலுவிடம் 13 கோலிகள் இருந்தன. அவற்றில் 3 கோலிகள் உடைந்து விட்டன. உடையாத கோலிகள் எத்தனை ? | ——— கோலிகள் |
| 4. ஒரு ரோஜாச் செடியில் 16 பூக்கள் இருந்தன. அவற்றில் 6 பூக்களைப் பறித்துவிட்டால் மீதி எத்தனை பூக்கள் இருக்கும் ? | ——— பூக்கள் |
| 5. 15 ஆடுகள் மந்தைக்குப் போனதில் 5 ஆடுகள் திரும்பி வரவில்லை. எத்னை ஆடுகள் திரும்பி வந்தன ? | ——— ஆடுகள் |

## பயிற்சி 48

1. ஒரு கூடையில் 96 மாம்பழங்கள் இருந்தன. அவற்றில் 24 பழங்கள் சிறியவை. பெரிய பழங்கள் எத்தனை?

| | | |
|---|---|---|
| மொத்த பழங்கள் | ... | 96 |
| சிறிய பழங்கள் | ... | 24 |
| பெரிய பழங்கள் | ... | 72 |

2. ஒரு நிலத்தில் 35 பனை மரங்கள் இருந்தன. அவற்றில் 20 மரங்களை வெட்டிவிட்டால் மீதி எத்தனை மரங்கள் இருக்கும் ?

| | | |
|---|---|---|
| மொத்த மரங்கள் | ... | 35 |
| வெட்டின மரங்கள் | ... | 20 |
| மீதி மரங்கள் | | |

3. ஒரு பெட்டியில் இருந்த 48 கண்ணாடி வளையல்களில் 9 உடைந்துவிட்டன. உடையாத வளையல்கள் எத்தனை ?

மொத்த வளையல்கள்
உடைந்தவை ... ______

உடையாதவை ... ______

4. ஒருவர் 50 ரூபாய் கடைக்கு எடுத்துச் சென்றார். அதில் அவர் 30 ரூபாய் செலவு செய்துவிட்டார். அவரிடம் மீதி எவ்வளவு ரூபாய் இருக்கும் ?

எடுத்துச் சென்றது, ரூ.
செலவு செய்தது ரூ. ______

மீதி ரூ. ______

5. ஒரு வகுப்பில் 42 பேர் படிக்கிறார்கள். அவர்களில் 18 பேர் பெண்கள். வகுப்பில் உள்ள பையன்கள் எத்தனை பேர் ?

மொத்தம் படிப்பவர்கள்
பெண்கள் ... ______

பையன்கள் ... ______

6. ஒரு மூட்டையில் 65 தேங்காய்கள் இருந்தன. அவற்றில் 46 தேங்காய்கள் விற்பனையான பிறகு மீதி எத்தனை காய்கள் இருக்கும்?

மொத்த தேங்காய்கள்
விற்ற தேங்காய்கள் ______

மீதி தேங்காய்கள் ... ______

7. இராமனிடம் 125 மணிகள் இருந்தன. கேசவனிடம் 78 மணிகள் இருந்தன. இராமனிடம் அதிகம் இருந்த மணிகள் எத்தனை ?

இராமனிடம் இருந்தவை
கேசவனிடம் இருந்தவை ______

இராமனிடம்
அதிக மணிகள் ______

8. ஓர் அரிசி மண்டியில் 250 மூட்டைகள் இருந்தன. அவற்றில் 175 மூட்டைகள் விற்கப்பட்டன. மீதி இருக்கும் மூட்டைகள் எத்தனை ?

மொத்த மூட்டைகள்
விற்கப்பட்டவை ______

மீதி மூட்டைகள் ... ______

9. ஒரு பழ வியாபாரி 750 வாழைப் பழங்களை வாங்கினார். அவற்றுள் 55 பழங்கள் கெட்டுவிட்டன. மீதி இருந்த நல்ல பழங்கள் எத்தனை ?

மொத்த பழங்கள் ...
கெட்டுப்போனவை ______

நல்ல பழங்கள் ... ______

# 4. பெருக்கல்

**2ஆல் பெருக்கல் :**

எண்களை இரண்டு இரண்டாகத் தாவி எண்ணினால் 2, 4, 6, 8, 10, 12, 14, 16, 18, 20, ... என்ற எண்கள் கிடைக்கும். இவை இரண்டின் மடங்குகள் ஆகும்.



| | |
|---|---|
| 2 | 1 மடங்கு 2 = 2 |
| 2+2 | 2 மடங்கு 2 = 4 |
| 2+2+2 | 3 மடங்கு 2 = 6 |
| 2+2+2+2 | 4 மடங்கு 2 = 8 |
| 2+2+2+2+2 | 5 மடங்கு 2 = 10 |
| 2+2+2+2+2+2 | 6 மடங்கு 2 = 12 |
| 2+2+2+2+2+2+2 | 7 மடங்கு 2 = 14 |
| 2+2+2+2+2+2+2 +2 | 8 மடங்கு 2 = 16 |
| 2+2+2+2+2+2+2 +2+2 | 9 மடங்கு 2 = 18 |
| 2+2+2+2+2+2+2 +2+2+2 | 10 மடங்கு 2 = 20 |

2 ஐ மீண்டும் மீண்டும் 10 தடவைகள் கூட்ட வருவது 20.

இதை 2 இன் 10 மடங்கு 20 எனலாம்.

2 இன் 10 மடங்கை 2 × 10 என்று எழுதுகிறோம்.

இதை 2 பெருக்கல் 10 என்று படிக்கிறோம்.

× என்பது பெருக்கல் குறி ஆகும்.

ஒரே எண்ணின் தொடர் கூட்டல்தான் பெருக்கல் ஆகும்.

| | |
|---|---|
| 1 மடங்கு 2 என்பது 1 × 2 = 2 | 6 மடங்கு 2 என்பது 6 × 2 = 12 |
| 2 மடங்கு 2 என்பது 2 × 2 = 4 | 7 மடங்கு 2 என்பது 7 × 2 = 14 |
| 3 மடங்கு 2 என்பது 3 × 2 = 6 | 8 மடங்கு 2 என்பது 8 × 2 = 16 |
| 4 மடங்கு 2 என்பது 4 × 2 = 8 | 9 மடங்கு 2 என்பது 9 × 2 = 18 |
| 5 மடங்கு 2 என்பது 5 × 2 = 10 | 10மடங்கு 2 என்பது 10× 2 = 20 |

## 5 ஆல் பெருக்கல் :

எண்களை ஐந்து, ஐந்தாகத் தாவி எழுதினால் 5, 10, 15, 20, 25, 30, 35, 40, 45, 50, ... என்ற எண்கள் கிடைக்கும். இவை ஐந்தின் மடங்குகள்.



| | |
|---|---|
| 5 | 1 மடங்கு 5 = 5 |
| 5+5 | 2 மடங்கு 5 = 10 |
| 5+5+5 | 3 மடங்கு 5 = 15 |
| 5+5+5+5 | 4 மடங்கு 5 = 20 |
| 5+5+5+5+5 | 5 மடங்கு 5 = 25 |
| 5+5+5+5+5+5 | 6 மடங்கு 5 = 30 |
| 5+5+5+5+5+5+5 | 7 மடங்கு 5 = 35 |
| 5+5+5+5+5+5+5 +5 | 8 மடங்கு 5 = 40 |
| 5+5+5+5+5+5+5 +5+5 | 9 மடங்கு 5 = 45 |
| 5+5+5+5+5+5+5 +5+5+5 | 10 மடங்கு 5 = 50 |

படத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் 5 நட்சத்திரங்கள் உள்ளன.

ஒரு கட்டத்தில் 5 நட்சத்திரங்கள்.

இரண்டு கட்டங்களில் 10 நட்சத்திரங்கள்.

மூன்று கட்டங்களில் 15 நட்சத்திரங்கள்.

இவ்வாறே பத்து கட்டங்களில் 50 நட்சத்திரங்கள் உள்ளன.

| | |
|---|---|
| 1 மடங்கு 5 என்பது $1 \times 5 = 5$ | 6 மடங்கு 5 என்பது $6 \times 5 = 30$ |
| 2 மடங்கு 5 என்பது $2 \times 5 = 10$ | 7 மடங்கு 5 என்பது $7 \times 5 = 35$ |
| 3 மடங்கு 5 என்பது $3 \times 5 = 15$ | 8 மடங்கு 5 என்பது $8 \times 5 = 40$ |
| 4 மடங்கு 5 என்பது $4 \times 5 = 20$ | 9 மடங்கு 5 என்பது $9 \times 5 = 45$ |
| 5 மடங்கு 5 என்பது $5 \times 5 = 25$ | 10மடங்கு 5 என்பது $10 \times 5 = 50$ |

**10ஆல் பெருக்கல் :**

எண்களைப் பத்துப் பத்தாகத் தாவி எழுதினால் கிடைக்கும் எண்கள் 10, 20, 30, 40, 50, 60, 70, 80, 90, 100, ... ஆகும். இவை பத்தின் மடங்குகள்.

| | |
|---|---|
| 10 | 1 மடங்கு 10 = 10 |
| 10 + 10 | 2 மடங்கு 10 = 20 |
| 10 + 10 + 10 | 3 மடங்கு 10 = 30 |
| 10 + 10 + 10 + 10 | 4 மடங்கு 10 = 40 |
| 10 + 10 + 10 + 10 + 10 | 5 மடங்கு 10 = 50 |
| 10 + 10 + 10 + 10 + 10 + 10 | 6 மடங்கு 10 = 60 |
| 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 | 7 மடங்கு 10 = 70 |
| 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 | 8 மடங்கு 10 = 80 |
| 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 | 9 மடங்கு 10 = 90 |
| 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 + 10 | 10 மடங்கு 10 = 100 |

| | |
|---|---|
| 1 மடங்கு 10 என்பது $1 \times 10 = 10$ | 6 மடங்கு 10 என்பது $6 \times 10 = 60$ |
| 2 மடங்கு 10 என்பது $2 \times 10 = 20$ | 7 மடங்கு 10 என்பது $7 \times 10 = 70$ |
| 3 மடங்கு 10 என்பது $3 \times 10 = 30$ | 8 மடங்கு 10 என்பது $8 \times 10 = 80$ |
| 4 மடங்கு 10 என்பது $4 \times 10 = 40$ | 9 மடங்கு 10 என்பது $9 \times 10 = 90$ |
| 5 மடங்கு 10 என்பது $5 \times 10 = 50$ | 10 மடங்கு 10 என்பது $10 \times 10 = 100$ |

**குறிப்பு:** 10 ஆம் வாய்பாட்டில் பெருக்கி வந்த எண்களைக் கவனி. பத்தின் மடங்குகளைக் காட்டும் எண்கள் 0 இல் முடிகின்றன.

3ஆல் பெருக்கல் :

| | |
|---|---|
| 3 | 1 மடங்கு 3 = 3 |
| 3+3 | 2 மடங்கு 3 = 6 |
| 3+3+3 | 3 மடங்கு 3 = 9 |
| 3+3+3+3 | 4 மடங்கு 3 = 12 |
| 3+3+3+3+3 | 5 மடங்கு 3 = 15 |
| 3+3+3+3+3+3 | 6 மடங்கு 3 = 18 |
| 3+3+3+3+3+3+3 | 7 மடங்கு 3 = 21 |
| 3+3+3+3+3+3+3+3 | 8 மடங்கு 3 = 24 |
| 3+3+3+3+3+3+3+3+3 | 9 மடங்கு 3 = 27 |
| 3+3+3+3+3+3+3+3+3+3 | 10 மடங்கு 3 = 30 |

படத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் 3 புள்ளிகள் உள்ளன.

ஒரு கட்டத்தில் 3 புள்ளிகள்.

இரண்டு கட்டங்களில் 6 புள்ளிகள்.

மூன்று கட்டங்களில் 9 புள்ளிகள்.

இவ்வாறே பத்து கட்டங்களில் 30 புள்ளிகள் உள்ளன.

| | |
|---|---|
| 1 மடங்கு 3 என்பது $1 \times 3 = 3$ | 6 மடங்கு 3 என்பது $6 \times 3 = 18$ |
| 2 மடங்கு 3 என்பது $2 \times 3 = 6$ | 7 மடங்கு 3 என்பது $7 \times 3 = 21$ |
| 3 மடங்கு 3 என்பது $3 \times 3 = 9$ | 8 மடங்கு 3 என்பது $8 \times 3 = 24$ |
| 4 மடங்கு 3 என்பது $4 \times 3 = 12$ | 9 மடங்கு 3 என்பது $9 \times 3 = 27$ |
| 5 மடங்கு 3 என்பது $5 \times 3 = 15$ | 10 மடங்கு 3 என்பது $10 \times 3 = 30$ |

**4ஆல் பெருக்கல் :**



| | |
|---|---|
| 4 | 1 மடங்கு 4 = 4 |
| 4+4 | 2 மடங்கு 4 = 8 |
| 4+4+4 | 3 மடங்கு 4 = 12 |
| 4+4+4+4 | 4 மடங்கு 4 = 16 |
| 4+4+4+4+4 | 5 மடங்கு 4 = 20 |
| 4+4+4+4+4+4 | 6 மடங்கு 4 = 24 |
| 4+4+4+4+4+4+4 | 7 மடங்கு 4 = 28 |
| 4+4+4+4+4+4+4 +4 | 8 மடங்கு 4 = 32 |
| 4+4+4+4+4+4+4 +4+4 | 9 மடங்கு 4 = 36 |
| 4+4+4+4+4+4+4 +4+4+4 | 10 மடங்கு 4 = 40 |

படத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் 4 பென்சில்கள் உள்ளன.

ஒரு கட்டத்தில் 4 பென்சில்கள்.

இரண்டு கட்டங்களில் 8 பென்சில்கள்.

மூன்று கட்டங்களில் 12 பென்சில்கள்.

இவ்வாறே பத்து கட்டங்களில் 40 பென்சில்கள் உள்ளன.

| | |
|---|---|
| 1 மடங்கு 4 என்பது $1 \times 4 = 4$ | 6 மடங்கு 4 என்பது $6 \times 4 = 24$ |
| 2 மடங்கு 4 என்பது $2 \times 4 = 8$ | 7 மடங்கு 4 என்பது $7 \times 4 = 28$ |
| 3 மடங்கு 4 என்பது $3 \times 4 = 12$ | 8 மடங்கு 4 என்பது $8 \times 4 = 32$ |
| 4 மடங்கு 4 என்பது $4 \times 4 = 16$ | 9 மடங்கு 4 என்பது $9 \times 4 = 36$ |
| 5 மடங்கு 4 என்பது $5 \times 4 = 20$ | 10 மடங்கு 4 என்பது $10 \times 4 = 40$ |

**1 ஆல் பெருக்கல் :**

எண்களைத் தொடர்ந்து எழுதினால் 1, 2, 3, 4, 5, ... என்ற எண்கள் கிடைக்கும்.



| | |
|---|---|
| 1 | 1 மடங்கு 1 = 1 |
| 1+1 | 2 மடங்கு 1 = 2 |
| 1+1+1 | 3 மடங்கு 1 = 3 |
| 1+1+1+1 | 4 மடங்கு 1 = 4 |
| 1+1+1+1+1 | 5 மடங்கு 1 = 5 |

1 மடங்கு 1 என்பது $1 \times 1 = 1$

2 மடங்கு 1 என்பது $2 \times 1 = 2$

3 மடங்கு 1 என்பது $3 \times 1 = 3$

4 மடங்கு 1 என்பது $4 \times 1 = 4$

5 மடங்கு 1 என்பது $5 \times 1 = 5$

இதை வேறு மாதிரியாகவும் காணலாம்.



| | |
|---|---|
| 1 | 1 மடங்கு 1 = 1 |
| 2 | 1 மடங்கு 2 = 2 |
| 3 | 1 மடங்கு 3 = 3 |
| 4 | 1 மடங்கு 4 = 4 |
| 5 | 1 மடங்கு 5 = 5 |

1 மடங்கு 1 என்பது $1 \times 1 = 1$
1 மடங்கு 2 என்பது $1 \times 2 = 2$
1 மடங்கு 3 என்பது $1 \times 3 = 3$
1 மடங்கு 4 என்பது $1 \times 4 = 4$
1 மடங்கு 5 என்பது $1 \times 5 = 5$

**ஓர் எண்ணை 1 ஆல் பெருக்கினால் அதே எண்தான் விடையாகக் கிடைக்கும்.**

**1 ஐ ஓர் எண்ணால் பெருக்கினாலும் அதே எண்தான் விடையாகக் கிடைக்கும்.**

**பூச்சியத்தால் பெருக்கல் :**



மேலேயுள்ள தட்டுகளைக் கவனி. ஒவ்வொரு தட்டிலும் ஒன்றும் இல்லை.

ஒன்றுமில்லை என்பதைப் பூச்சியத்தால் (0 ஆல்) குறிக்கிறோம்.

| | | |
|---|---|---|
| 1 தட்டில் உள்ளது | $0$ | $1 \times 0 = 0$ |
| 2 தட்டுகளில் உள்ளது | $0 + 0$ | $2 \times 0 = 0$ |
| 3 தட்டுகளில் உள்ளது | $0 + 0 + 0$ | $3 \times 0 = 0$ |
| 4 தட்டுகளில் உள்ளது | $0 + 0 + 0 + 0$ | $4 \times 0 = 0$ |
| 5 தட்டுகளில் உள்ளது | $0 + 0 + 0 + 0 + 0$ | $5 \times 0 = 0$ |

கீழேயுள்ள எண் கோலங்களைக் கவனி. இவை ஐந்து ஐந்தாகக் குறைகின்றன.

| | | | |
|---|---|---|---|
| ✱✱✱✱✱ | ✱✱✱✱✱ | ✱✱✱✱✱ | $3 \times 5 = 15$ |
| ✱✱✱✱✱ | ✱✱✱✱✱ | | $2 \times 5 = 10$ |
| ✱✱✱✱✱ | | | $1 \times 5 = 5$ |
| | | | $0 \times 5 = 0$ |

எனவே $5 \times 0; \quad 0 \times 5 = 0.$

**ஓர் எண்ணை 0 ஆல் பெருக்கினால் 0 தான் விடையாகக் கிடைக்கிறது.**

**0 ஐ ஓர் எண்ணால் பெருக்கினாலும் 0 தான் விடையாகக் கிடைக்கிறது.**

# பெருக்கல் வாய்பாடு

| | | |
|---|---|---|
| 1 × 1 = 1 | 1 × 2 = 2 | 1 × 3 = 3 |
| 2 × 1 = 2 | 2 × 2 = 4 | 2 × 3 = 6 |
| 3 × 1 = 3 | 3 × 2 = 6 | 3 × 3 = 9 |
| 4 × 1 = 4 | 4 × 2 = 8 | 4 × 3 = 12 |
| 5 × 1 = 5 | 5 × 2 = 10 | 5 × 3 = 15 |
| 6 × 1 = 6 | 6 × 2 = 12 | 6 × 3 = 18 |
| 7 × 1 = 7 | 7 × 2 = 14 | 7 × 3 = 21 |
| 8 × 1 = 8 | 8 × 2 = 16 | 8 × 3 = 24 |
| 9 × 1 = 9 | 9 × 2 = 18 | 9 × 3 = 27 |
| 10 × 1 = 10 | 10 × 2 = 20 | 10 × 3 = 30 |
| 1 × 4 = 4 | 1 × 5 = 5 | 1 × 10 = 10 |
| 2 × 4 = 8 | 2 × 5 = 10 | 2 × 10 = 20 |
| 3 × 4 = 12 | 3 × 5 = 15 | 3 × 10 = 30 |
| 4 × 4 = 16 | 4 × 5 = 20 | 4 × 10 = 40 |
| 5 × 4 = 20 | 5 × 5 = 25 | 5 × 10 = 50 |
| 6 × 4 = 24 | 6 × 5 = 30 | 6 × 10 = 60 |
| 7 × 4 = 28 | 7 × 5 = 35 | 7 × 10 = 70 |
| 8 × 4 = 32 | 8 × 5 = 40 | 8 × 10 = 80 |
| 9 × 4 = 36 | 9 × 5 = 45 | 9 × 10 = 90 |
| 10 × 4 = 40 | 10 × 5 = 50 | 10 × 10 = 100 |

# பெருக்கல் (தொடர்ச்சி)







$2 \times 3$ என்பதும் $3 \times 2$ என்பதும் ஒரே விடையைத் தருகிறது.

நீ கற்ற வாய்பாடுகளை இரு விதமாகவும் சொல்லிப் பழகுக.

| | | | |
|---|---|---|---|
| $1 \times 5 = 5$ | $5 \times 1 = 5$ | $1 \times 10 = 10$ | $10 \times 1 = 10$ |
| $2 \times 5 = 10$ | $5 \times 2 = 10$ | $2 \times 10 = 20$ | $10 \times 2 = 20$ |
| $3 \times 5 = 15$ | $5 \times 3 = 15$ | $3 \times 10 = 30$ | $10 \times 3 = 30$ |
| $4 \times 5 = 20$ | $5 \times 4 = 20$ | $4 \times 10 = 40$ | $10 \times 4 = 40$ |
| $5 \times 5 = 25$ | $5 \times 5 = 25$ | $5 \times 10 = 50$ | $10 \times 5 = 50$ |

## பயிற்சி 49

**1.** கீழேயுள்ள அணிக் கோலங்கள் ஒவ்வொன்றின் பெருக்கலை எழுதி விடையை எழுதுக.



$1 \times 4 = 4$



__________



__________



______

______

2. பெருக்கலாக எழுதி விடையை எழுதுக.

| | |
|---|---|
| $2 + 2$ | $2 \times 2 = 4$ |
| $3 + 3 + 3$ | ______ |
| $5 + 5 + 5 + 5 + 5$ | ______ |
| $1 + 1 + 1 + 1$ | ______ |
| $4 + 4 + 4 + 4$ | ______ |
| $10 + 10 + 10$ | ______ |

3. பெருக்கலாக எழுதி விடையை எழுதுக.

| | |
|---|---|
| 2 மடங்கு 4 | $2 \times 4 = 8$ |
| 7 மடங்கு 2 | ______ |
| 4 மடங்கு 5 | ______ |
| 6 மடங்கு 3 | ______ |
| 9 மடங்கு 10 | ______ |
| 8 மடங்கு 2 | |

4. காலி இடங்களை நிரப்புக.

| | | |
|---|---|---|
| $2 \times 2 =$ ——<br>$4 \times 3 =$ ——<br>$5 \times 4 =$ ——<br>$1 \times 5 =$ ——<br>$8 \times 0 =$ ——<br>$9 \times 0 =$ —— | $3 \times 2 =$ ——<br>$6 \times 4 =$ ——<br>$7 \times 5 =$ ——<br>$9 \times 2 =$ ——<br>$4 \times 10 =$ ——<br>$10 \times 1 =$ —— | $5 \times 10 =$ ——<br>$2 \times 4 =$ ——<br>$8 \times 3 =$ ——<br>$6 \times 5 =$ ——<br>$4 \times 0 =$ ——<br>$7 \times 4 =$ —— |
| —— $\times 2 = 12$<br>—— $\times 2 = 10$<br>—— $\times 2 = 14$<br>—— $\times 2 = 16$<br>—— $\times 2 = 8$<br>—— $\times 2 = 18$ | —— $\times 3 = 9$<br>—— $\times 3 = 15$<br>—— $\times 3 = 21$<br>—— $\times 3 = 27$<br>—— $\times 3 = 30$<br>—— $\times 3 = 12$ | —— $\times 4 = 16$<br>—— $\times 4 = 4$<br>—— $\times 4 = 0$<br>—— $\times 4 = 28$<br>—— $\times 4 = 36$<br>—— $\times 4 = 20$ |
| $3 \times$ —— $= 12$<br>$2 \times$ —— $= 8$<br>$5 \times$ —— $= 10$<br>$10 \times$ —— $= 20$<br>$7 \times$ —— $= 14$<br>$6 \times$ —— $= 30$ | $8 \times$ —— $= 16$<br>$3 \times$ —— $= 9$<br>$6 \times$ —— $= 24$<br>$5 \times$ —— $= 15$<br>$4 \times$ —— $= 16$<br>$3 \times$ —— $= 6$ | $6 \times$ —— $= 18$<br>$5 \times$ —— $= 20$<br>$8 \times$ —— $= 24$<br>$5 \times$ —— $= 25$<br>$9 \times$ —— $= 27$<br>$8 \times$ —— $= 40$ |

## பயிற்சி 50

1. ஒரு பெஞ்சியில் 5 பேர் உட்காரலாம். 8 பெஞ்சிகளில் எத்தனை பேர் உட்காரலாம்?

1 பெஞ்சியில் ... 5 பேர்
8 பெஞ்சிகளில் ... $5 \times 8$

40 பேர்

2. ஒரு வர்ணப் பெட்டியில் 10 பென்சில்கள் வீதம் 4 பெட்டிகளில் எத்தனை பென்சில்கள் இருக்கும்?

1 பெட்டியில் ...
4 பெட்டிகளில் ... ______

பென்சில்கள் ______

3. ஒரு ரூபாய்க்கு 4 வாழைக்காய்கள் வீதம் 3 ரூபாய்க்கு எத்தனை வாழைக்காய்கள் வாங்கலாம்?

1 ரூபாய்க்கு ...
3 ரூபாய்க்கு ... ______

வாழைக்காய்கள் ______

4. ஒரு பையனுக்கு 3 மிட்டாய்கள் வீதம் 9 பையன்களுக்கு எத்தனை மிட்டாய்கள் தேவை?

1 பையனுக்கு ...
9 பையன்களுக்கு ... ______

மிட்டாய்கள் ______

5. ஒரு பொட்டலத்தில் 5 பிஸ்கட்டு வீதம் 5 பொட்டலங்களில் எத்தனை பிஸ்கட்டுகள் இருக்கும்?

1 பொட்டலத்தில் ...
5 பொட்டலங்களில் ______

பிஸ்கட்டுகள் ______

6. ஒரு வரிசையில் 4 தக்காளிச் செடிகள் வீதம் 6 வரிசைகளில் எத்தனை செடிகள் நடலாம்?

1 வரிசையில் ...
6 வரிசைகளில் ... ______

செடிகள் ______

7. ஒரு பேனாவின் விலை 3 ரூபாய் வீதம் 4 பேனாக்களின் விலை என்ன?

1 பேனாவின் விலை ரூ.
4 பேனாக்களின் விலை ரூ. ______

ரூ. ______

8. ஒரு பையின் விலை 5 ரூபாய் என்றால் 2 பைகளின் விலை என்ன?

1 பையின் விலை ரூ.
2 பைகளின் விலை ரூ. ______

ரூ. ______

9. ஒரு சட்டைக்கு 4 பொத்தான்கள் வீதம் 7 சட்டைகளுக்கு எத்தனை பொத்தான்கள் தேவை?

1 சட்டைக்கு ...
7 சட்டைகளுக்கு ... ______

பொத்தான்கள் ______

# 5. பின்ன எண்கள்

## அரைப்பாகம்



ஒரு எலுமிச்சம்பழம் இரண்டு சம பாகங்களாக நறுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாகமும் முழு எலுமிச்சம்பழத்தில் பாதி அல்லது அரைப்பாகம்.



இந்த பிஸ்கட் இரண்டு சம பாகங்களாகப் பிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாகமும் முழு பிஸ்கட்டில் பாதி அல்லது அரைப்பாகம்.

பின்வரும் படங்களில் மையிட்டுள்ள பகுதி முழு உருவத்தில் எவ்வளவு பாகம்? அரைப்பாகம்.











6



மையிடப்படாத பகுதி முழு உருவத்தில் எவ்வளவு பாகம்? அரைப்பாகம்.

முழு உருவத்தை இரண்டு அரைப்பாகங்கள் ஆக்கலாம். முழு உருவத்தில் ஓர் அரைப்பாகத்தை நீக்கிவிட்டால் மற்றோர் அரைப் பாகம் மீதம் இருக்கும் என்பதைக் கவனிக்க.

கால்பாகம்



இந்த உருவம் நான்கு சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாகமும் முழு உருவத்தில் கால்பாகம் ஆகும்.

இந்தக் காகிதத் துண்டு நான்கு சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக் கிறது. ஒவ்வொரு பாகமும் முழு உருவத்தில் கால்பாகம் ஆகும்.



ஒரு எலுமிச்சம்பழத்தை நான்கு சம பாகங்களாக்கினால் கிடைக் கும் துண்டு ஒவ்வொன்றும் முழுஎலுமிச்சம்பழத்தில் கால்பாகம் ஆகும்.







## பயிற்சி 51

கீழேயுள்ள படங்கள் ஒவ்வொன்றிலும் கால்பாகத்தை வண்ண மிட்டுக் காட்டுக.








கீழே கொடுக்கப்பட்டுள்ள படங்கள் ஒவ்வொன்றிலும் அடுத்து அடுத்து உள்ள இரண்டு கால்பாகங்களை வண்ணமிட்டுக் காட்டுக.








வண்ணமிட்ட பகுதி முழு உருவத்தில் எவ்வளவு பாகம் என்று கவனிக்க.

இரண்டு கால்பாகங்கள் சேர்ந்தது ஓர் அரைப்பாகம் என்பதை அறிந்து கொள்க.

### முக்கால் பாகம்



இந்த உருவம் நான்கு சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் வண்ணம் தீட்டப் பட்டுள்ள பகுதி முழு உருவத்தில் முக்கால் பாகம்.

மூன்று கால் பாகங்கள் சேர்ந்தது முக்கால் பாகம் என்பதை அறிந்துகொள்க. வண்ணம் தீட்டப்படாத பகுதி முழு உருவத்தில் கால் பாகம் என்பதைக் கவனிக்க.





மேலே உள்ள உருவங்கள் ஒவ்வொன்றும் நான்கு சம பாகங் களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கோடிட்டுள்ள பகுதி முழு உருவத்தில் முக்கால் பாகம் ஆகும்; கோடிடப்படாத பகுதி கால்பாகம் ஆகும். கால் பகுதியும் முக்கால் பகுதியும் சேர்ந்தது முழு உருவம் ஆகும்.

### பயிற்சி 52

கீழே சில உருவங்களின் படங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் நான்கு சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வோர் உருவத்திலும் முக்கால் பாகத்தை வண்ணமிட்டுக் காட்டுக.

  

 

  

படம் ஒவ்வொன்றிலும் வண்ணமிடப்படாத பகுதி எவ்வளவு பாகம்? ____________

முழு உருவத்தில் முக்கால் பகுதியை நீக்கிவிட்டால் மீதிப்பகுதி என்ன? ____________

முழு உருவத்தில் கால்பகுதியை நீக்கிவிட்டால் மீதிப்பகுதி என்ன? ____________

# 6. நாணயங்கள்

கீழே படத்தில் காட்டப்பட்டுள்ளவை நம் நாட்டில் தற்பொழுது புழக்கத்தில் உள்ள நாணயங்கள்.



1 பைசா



2 பைசா



3 பைசா



5 பைசா



10 பைசா



20 பைசா



25 பைசா



50 பைசா



ஒரு ரூபாய்

இவை தவிர 1 ரூபாய், 2 ரூபாய், 5 ரூபாய், 10 ரூபாய், 20 ரூபாய், 50 ரூபாய், 100 ரூபாய் நோட்டுகளும் புழக்கத்தில் உள்ளன. ஒவ்வொரு நோட்டின் மேலும் அதன் மதிப்பு அச்சடித்து இருக்கும். நோட்டின் மேல் இன்னும் என்னென்ன விவரங்கள், உருவங்கள் அச்சடிக்கப்பட்டுள்ளன என்று ஒவ்வொரு வகை நோட்டையும் பார்த்து அறிந்துகொள்க.

## நாணயங்களுக்குச் சில்லறை மாற்றல் :

நாணயங்களுக்குச் சில்லறை மாற்றத் தெரிந்துகொள்க.

கீழே சில நாணயங்களுக்குச் சமமான சில்லறை நாணயங்கள் தரப்பட்டுள்ளன.

இன்னும் எவ்வாறெல்லாம் சில்லறை மாற்றலாம் என்பதைக் கற்றுக்கொள்க.





2 பைசா = 1 பைசா + 1 பைசா





3 பைசா = 2 பைசா + 1 பைசா





5 பைசா = 3 பைசா + 2 பைசா





10 பைசா = 5 பைசா + 5 பைசா





20 பைசா = 10 பைசா + 10 பைசா




## பயிற்சி 53

**கீழ்க் குறித்த நாணயங்களின் மொத்த மதிப்பு என்ன ?**

1) 5 பைசா + 3 பைசா + 2 பைசா = 10 பைசா

2) 1 பைசா + 2 பைசா + 3 பைசா =

3) 10 பைசா + 5 பைசா + 2 பைசா =

4) 5 பைசா + 5 பைசா + 3 பைசா =

5) 10 பைசா + 5 பைசா + 3 பைசா =

6) 20 பைசா + 10 பைசா + 2 பைசா =

7) 3 பைசா + 5 பைசா + 20 பைசா =

8) 20 பைசா + 20 பைசா + 10 பைசா =

9) 1 பைசா + 1 பைசா + 3 பைசா =

10) 50 பைசா + 20 பைசா + 5 பைசா =

11) 50 பைசா + 20 பைசா + 20 பைசா =

12) 5 பைசா + 10 பைசா + 10 பைசா =

கீழ்க் குறித்துள்ள மதிப்புத் தொகை கிடைக்க எந்தெந்த நாணயங்களைக் கொடுக்கலாம் என்பதைக் குறிக்க.

1) 28 பைசா = 25 பைசா +, 3 பைசா

2) 15 பைசா = ____________________

3) 23 பைசா = ____________________

4) 37 பைசா = ____________________

5) 45 பைசா = ____________________

6) 59 பைசா = ____________________

7) 73 பைசா = ____________________

8) 80 பைசா = ____________________

9) 65 பைசா = ____________________

10) 88 பைசா = ____________________

11) 57 பைசா = ____________________

12) 95 பைசா = ____________________

குறிப்பு : குறைந்த எண்ணிக்கை நாணயங்களாக எடுக்கப் பழகவும்.

## பயிற்சி 54

**கடை வைத்து விளையாடுவீர் !**




1. ஒரு பென்சிலும் ஒரு சாக்லெட்டும் சேர்ந்து விலை ________
2. ஒரு பிஸ்கட்டும் ஒரு சாக்லெட்டும் சேர்ந்து விலை ________
3. ஒரு பிஸ்கட்டும் ஓர் இரப்பரும் வாங்கினால் கொடுக்க வேண்டிய தொகை எவ்வளவு ? ________
4. ஒரு பந்தும் ஒரு சீப்பும் சேர்ந்து விலை என்ன ? ________
5. ஒரு கோலியும் ஒரு சீப்பும் சேர்ந்து விலை என்ன ? ________
6. ஒரு பிஸ்கட்டும் ஒரு பென்சிலும் நீ வாங்க வேண்டும் என்றால் எவ்வளவு தொகை கொடுக்கவேண்டும் ? ________
7. ஒரு சாக்லெட்டும் ஒரு பலூனும் சேர்ந்து விலை என்ன ? ________
8. ஒரு பந்தும் ஒரு சாக்லெட்டும் சேர்ந்து விலை என்ன? ________
9. ஒரு பென்சிலும் ஓர் இரப்பரும் வாங்க எவ்வளவு தொகை கொடுக்கவேண்டும் ?
10. ஒரு சீப்பும் ஒரு பலூனும் சேர்ந்து விலை என்ன ? ________

# 7. அளவைகள்

## கால அளவு

கடிகாரங்கள் காட்டும் கால அளவுகளைக் கவனிக்க.




3 மணி
மூன்று மணி




8 மணி
எட்டு மணி




4·30 மணி
நாலரை மணி




11·30 மணி
பதினொண்ணரை மணி




6·15· மணி
ஆறேகால் மணி




12·15 மணி
பன்னிரண்டேகால் மணி

கடிகாரத்தில் முழு மணி காட்டும்பொழுது பெரிய முள் 12இல் இருக்கும்.

அரை மணி காட்டும்பொழுது பெரிய முள் 6இல் இருக்கும்.

கால் மணி காட்டும்பொழுது பெரிய முள் 3இல் இருக்கும்.

கடிகாரத்தில் சிறிய முள் இருக்கும் இடத்தைப் பார்த்து மணியையும், பெரிய முள் இருக்கும் இடத்தைப் பார்த்து நிமிடத்தையும் கணக்கிடுகிறோம்.

| | | |
|---|---|---|
| 1 | மணிக்கு | 60 நிமிடம் |
| அரை | மணிக்கு | 30 நிமிடம் |
| கால் | மணிக்கு | 15 நிமிடம் |
| 1 | நாளுக்கு | 24 மணி |

## பயிற்சி 55

**கீழேயுள்ள கடிகாரங்கள் காட்டும் மணி என்ன ?**

| | | | |
|---|---|---|---|
|  |  |  |  |
| 4 மணி | 1·15 மணி | ---------- | ---------- |
|  |  |  |  |
| ---------- | ---------- | ---------- | ---------- |

**மணியைக் காட்ட கடிகாரத்தின் முகப்பில் முள்களை வரைக.**

| | | | |
|---|---|---|---|
|  |  |  |  |
| 1-30 மணி | 5 மணி | 4-15 மணி | 11 மணி |
|  |  |  |  |
| 3·15 மணி | 5·30 மணி | 2 மணி | 9·30 மணி |

**வாரம் :**

ஒரு வாரத்துக்கு 7 நாள்கள். நாள்களுக்குப் பெயர்கள் உண்டு. அவை கிழமைகள் என்று அழைக்கப்படும்.

| | |
|---|---|
| ஞாயிற்றுக்கிழமை | வியாழக்கிழமை |
| திங்கட்கிழமை | வெள்ளிக்கிழமை |
| செவ்வாய்க்கிழமை | சனிக்கிழமை |
| புதன்கிழமை | |

### பயிற்சி 56

காலி இடத்தை நிரப்புக.

திங்கட்கிழமைக்கு முந்திய நாள் __________

வெள்ளிக்கிழமைக்கு அடுத்த நாள் __________

செவ்வாய்க்கிழமைக்கு மூன்றாவது நாள் __________

புதன்கிழமைக்கு இரண்டாவது நாள் __________

பள்ளியின் விடுமுறை நாள் __________

சனிக்கிழமைக்கு அடுத்த நாள் __________

**மாதம் :**

ஒரு மாதத்திற்கு 30 நாள்கள்.
ஓர் ஆண்டுக்கு 12 மாதங்கள்.

| ஆங்கில மாதங்கள் | தமிழ் மாதங்கள் |
|---|---|
| ஜனவரி | சித்திரை |
| பிப்ரவரி | வைகாசி |
| மார்ச்சு | ஆனி |
| ஏப்ரல் | ஆடி |
| மே | ஆவணி |
| ஜூன் | புரட்டாசி |
| ஜூலை | ஐப்பசி |
| ஆகஸ்டு | கார்த்திகை |
| செப்டம்பர் | மார்கழி |
| அக்டோபர் | தை |
| நவம்பர் | மாசி |
| டிசம்பர் | பங்குனி |

## பயிற்சி 57

1. தமிழ் மாதங்களில் முதலாவது மாதம் ____________
2. தமிழ் மாதங்களில் இரண்டாவது மாதம் ____________
3. தமிழ் மாதங்களில் மூன்றாவது மாதம் ____________
4. பொங்கல் பண்டிகை கொண்டாடும் மாதம் ____________
5. தீபாவளி பண்டிகை கொண்டாடும் மாதம் ____________
6. ஆங்கில மாதங்களில் இண்டாவது மாதம் ____________
7. ஆங்கில மாதங்களில் மூன்றாவது மாதம் ____________
8. தை மாதத்திற்கு முந்திய மாதம் ____________
9. புரட்டாசி மாதத்திற்கு அடுத்த மாதம் ____________
10. ஆகஸ்டு மாதத்திற்கு முந்திய மாதம் ____________
11. நவம்பர் மாதத்திற்கு அடுத்த மாதம் ____________
12. கிருத்துமஸ் பண்டிகை கொண்டாடும் மாதம் ____________

## நீட்டல் அளவு

பூ வாங்கும்பொழுது அதனை எப்படி அளந்து வாங்குகிறோம்? முழம் கணக்கில் அளந்து வாங்குகிறோம். கயிறு எத்தனை சாண் நீளம் என்று அளந்து சொல்கிறோம். அறையின் நீளத்தைக் காலடிக் கணக்கில் அளந்து சொல்கிறோம்.

முழம், சாண், காலடி முதலிய அளவுகள் ஒருவருக்கொருவர் வேறுபடும். எனவே எல்லோருக்கும் பொதுவான ஓர் அளவால் அளத்தல் நல்லது.



கீழே காட்டப்பட்டுள்ளது அளவுகோலின் படம்.




துணிக் கடைகளில் நாம் துணி வாங்கும்பொழுது துணியை மீட்டர் அளவுகோலால் அளந்து கொடுப்பார்கள். அளவுகோலில் ஒவ்வொரு சிறிய அளவும் ஒரு சென்டிமீட்டர் ஆகும்.

100 சென்டிமீட்டர் = 1 மீட்டர்

## பயிற்சி 58

1. உன் வகுப்பில் உள்ள கரும்பலகையின் நீளம் எத்தனை சாண்? __________
2. உன் வகுப்பறையின் நீளம் எத்தனை காலடி? __________
3. உன் ஆசிரியருடைய மேசையின் நீளம் எத்தனை முழம்? __________
4. உன் பெஞ்சின் நீளம் எத்தனை முழம்? __________
5. உன் வகுப்பறையின் வாயிலின் அகலம் எத்தனை சாண்? __________

## கொள்ளளவு



வாளி, குவளை இவற்றில் எதில் நிறைய நீர் பிடிக்கும்? வாளியில் நிறைய நீர் பிடிக்கும். குவளையில் குறைவாக நீர் பிடிக்கும்.

வாளியின் கொள்ளளவு அதிகம்.

குவளையின் கொள்ளளவு குறைவு.

குவளையில் நீர்மொண்டு வாளியில் ஊற்றிப்பார். வாளியில் எத்தனை குவளை நீர் பிடிக்கிறது? 20 குவளை நீர் பிடித்தால் வாளியின்

கொள்ளளவு 20 குவளை என்கிறோம். இன்னும் பெரிதாக உள்ள குவளையைக் கொண்டு அளந்தோமானால், 20 குவளை நீர் பிடிக்காது. குறைவான எண்ணிக்கையிலேயே வாளி நிரம்பிவிடும் எனவே கொள்ளளவை அறிய ஒரு பொதுவான அளவு நமக்குத் தேவைப்படுகிறது.



திரவங்களை லிட்டர் அளவையில் அளக்கிறோம். பாலை லிட்டர் அளவில் அளந்து வாங்குகிறோம். மண்ணெண்ணெய் வாங்கும்பொழுது லிட்டர் அளவில் அளந்து வாங்குகிறோம்.

### நிறுத்தல் அளவை

நாம் காய்கறி, அரிசி, பருப்பு போன்ற பொருள்களைக் கடைகளில் நிறுத்து வாங்குகிறோம். மளிகைக் கடைகளில் பொருள்களை வாங்கும்பொழுது கிலோ அளவையில் நிறுத்து வாங்குகிறோம்.

### பயிற்சி 59

அம்புக் குறியிட்டுப் பொருத்திக் காட்டுக.

| வாங்கும் பொருள் | அளவை |
|---|---|
| சர்க்கரை | |
| பால் | லிட்டர் |
| கத்தரிக்காய் | முழம் |
| தக்காளி | கிலோகிராம் |
| மண்ணெண்ணெய் | மீட்டர் |
| பூச்சரம் | |
| சட்டைத் துணி | |

# 8. வடிவங்கள்

## கன உருவங்கள்

**கனச் செவ்வகம் :**




**செங்கல், சாக்பீஸ் பெட்டி, தீப்பெட்டி இவை கனச் செவ்வக வடிவமானவை.**

**கன சதுரம் :**




**படத்திலுள்ள தேயிலைப் பொட்டலம், மரப்பெட்டி இவை கன சதுர வடிவமானவை.**

**கோளம் :**



**பந்து, கோலி, எலுமிச்சம் பழம் இவை கோள வடிவமானவை.**

**உருளை :**




படத்திலுள்ள பால்குவளை, பவுடர் டின், குழல் விளக்கு, பென்சில் இவை உருளை வடிவமானவை.

## சம தள வடிவங்கள்

**வட்டம் :**




வளையல், ரூபாய் நாணயம், கடிகாரத்தின் முகப்பு இவை வட்ட வடிவமானவை.

**செவ்வகம் :**




எழுது பலகை, தபால் கார்டு, கவர் இவை செவ்வக வடிவமானவை.

**சதுரம் :**









படத்திலுள்ள 5 பைசா நாணயம், தபால் தலை, பளிங்குத் தரைக்கல் இவை சதுர வடிவமானவை.

## பயிற்சி 60

1. கீழ்க்காணும் படங்களில் உள்ள கன உருவங்களின் பெயர்களை எழுதவும்.

(அ)





(இ)

(ஆ)





(ஈ)

(அ) ____________ (இ) ____________

(ஆ) ____________ (ஈ) ____________

**2. கீழே சில சமதள உருவங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றின் கீழே அவற்றின் பெயர்களை எழுதுக.**

  

__________ __________ __________

3. (1) வண்டிச் சக்கரத்தின் வடிவம் என்ன ? __________

(2) ஊதுகுழலின் வடிவம் என்ன ? __________

(3) நம் தேசியக் கொடியின் நடுவில் உள்ள அசோகச் சக்கரத்தின் வடிவம் என்ன? __________

(4) உன் நோட்டுப் புத்தகத்திலுள்ள ஒவ்வொரு தாளின் வடிவம் என்ன ? __________

(5) லட்டின் வடிவம் என்ன ?

(6) குடத்தின் வாயின் வடிவம் என்ன ? __________

(7) டிரங்குப் பெட்டியின் வடிவம் என்ன ? __________

(8) அரை ரூபாய் நாணயத்தின் வடிவம் என்ன ? __________

(9) சதுரங்கப் பலகையின் வடிவம் என்ன ? __________

(10) கரும்பலகையின் வடிவம் என்ன ? __________

# ஆசிரியர்களுக்கான குறிப்புகள்

இந்த நூல் பாட நூலாகவும் பயிற்சி நூலாகவும் அமையும்படி எழுதப்பட்டுள்ளது. இந்த நூலில் அடிப்படைக் கணிதக் கருத்துக்கள், செயல்முறைகள் பற்றிய விளக்கங்கள் ஆசிரியர்களுக்காக கற்பிக்கும் முறையில் உதவும் பொருட்டுத் தரப்பட்டுள்ளன. இயன்ற வரையில் கணிதக் கருத்துக்களை இளஞ்சிறுவர்கள், சிறுமியர் புரிந்துகொண்டு, பிறகு அக்கருத்துக்களை ஒட்டிய கணக்குகளைச் செய்து, பயிற்சி பெறும்படி செய்ய ஆசிரியர்கள் முயலவேண்டும். இதற்கு ஒவ்வொரு கருத்தையும் கற்பிக்கும் நிலையில் அதிக நேரம் செலவிட வேண்டியிருக்கும். ஆனால் கருத்துக்களை மாணாக்கர்கள் புரிந்துகொண்ட பிறகு பயிற்சி நிலையில் அவர்கள் வேகமாகக் கணக்குகள் போடுவதைக் காணலாம்.

தேவைப்பட்டால் கூடுதல் பயிற்சிக்காக மாணாக்கர்களுக்கு ஆசிரியர்கள் தாமாகவே சில கணக்குகளை அமைத்துத் தரலாம்.

மாதிரிக் கணக்குகளில் சில படிகளை விளக்குவதற்காக விரிவான படிகள் காட்டப்பட்டுள்ளன. மாணாக்கர்கள் செயல்முறைக் கருத்துக்களை நன்கு புரிந்துகொண்ட பிறகு அவர்கள் கணக்குகளைச் செய்யும்பொழுது, எல்லா விளக்கப் படிகளையும் போட்டுக் காட்டும்படி வற்புறுத்த வேண்டுவதில்லை. சுருக்கமாகவும், சரியான முறையிலும் விரைவாகவும் கணக்குகளைச் செய்வதையே குறிக்கோளாகக் கொள்ளவேண்டும்.

புளியங்கொட்டைகள், சோழிகள், குச்சிக் கட்டுகள் போன்றவைகளைத் துணைக் கருவிகளாகக் கொண்டு ‘இடமதிப்பு’ போன்ற கருத்துக்களையும், கூட்டல் கழித்தல் செயல்களையும் விளக்குதல், சுற்றுப்புற நிலைகளுக்கு ஏற்ப ஆசிரியர்கள் கணக்குகள் அமைத்துக் கொடுத்தல், விளையாட்டு முறையில் கணக்குகளைப் போடுதல், வாய்பாடுகளில் எண்கள் அமையும் விதம் பற்றிய விளக்கங்கள் அறிதல் போன்றவை இளம் மாணாக்கர்கள் கணிதம் கற்றுக்கொள்வதை எளிமை ஆக்கும்.

# 1. எண்கள்

## 4. கம்பி மணிச்சட்டம்

(நூறுகள், பத்துகள், ஒன்றுகள்)




படத்தில் காட்டியுள்ள அமைப்பைக் கம்பி மணிச் சட்டம் என்பர். எண்களின் இடமதிப்புகளை நன்கு விளக்க இது பயன்படும். மேலும் கணக்குகளைச் செய்வதற்கு இது மிகவும் பயன்படும். இஃது ஓர் எளிய கருவியாகும்.

**பயன்படுத்தும் முறை :**




கம்பி மணிச்சட்டத்தில் ஒவ்வொரு கம்பி யிலும் வெவ்வேறு வண்ணமுள்ள சில மணிகள் இருக்கும். படத்திலுள்ள கம்பி மணிச்சட்டத்தில் வலக்கோடியிலுள்ள கம்பியில் மட்டும் ஐந்து மணி கள் கோர்க்கப்பட்டுள்ளன. அது ஐந்து ஒன்றுகள் அல்லது ஐந்து என்ற எண்ணைக் குறிக்கும்.




ஒரு கம்பியில் ஒன்பது மணிகளுக்கு மேல் கோர்ப்பது இல்லை. ஒன்பது மணிகளுக்கு மேல் ஒன்றைக் கோர்த்தால் பத்து மணிகள் ஆகி பத்து ஒன்றுகள் அல்லது ஒரு பத்து என்றாகின்றது. எனவே, ஒரு பத்து எண்ணிவிட்டோம் என்பதைக் காட்ட வேறு வண்ணமுள்ள ஒரு மணியை, ஒன்று களைக் குறிக்கும் கம்பிக்கு இடப் பக்கத்தில் உள்ள கம்பியில், கோர்த்துவிட வேண்டும். தற்பொழுது ஒன்றுகளைக் குறிக்கும் கம்பியில் மணிகள் இருக்கக் கூடாது.







இவ்வாறு ஒன்பது மணிகளை அல்லது தொண்ணூறு என்ற எண்ணைக் காட்ட பத்துகள் இடத்தைக் காட்டும் கம்பியில் ஒன்பது ஒரே வண்ணமுள்ள மணிகளைக் கோர்க்க வேண்டும். மேலும் ஒரு பத்துக்காக ஒரு மணியைக் கோர்த்தால் பத்து பத்து ஆகின்ற தல்லவா? அதாவது நூறு கிடைக்கின்றது. இப்பொழுது ஒன்றுகளைக் குறிக்கும் மணி பத்துகளைக் குறிக்கும் மணி இவற்றிற்கு வேறுபட்ட வண்ணமுள்ள ஒரு மணியை பத்து கள் இடத்தைக் காட்டும் கம்பியின் இடப்புறமுள்ள கம்பியில் கோர்க்கவேண்டும்.

## 2. கூட்டல்

### கற்றல் செயல்கள்

1. புளியங்கொட்டைகள், சோழிகள், மணிகள் போன்ற பொருள்களை உபயோகித்து எண்ணிகளின் கூட்டலைச் செய்தல்.

2. கூட்டல் அட்டவணையைத் தயார் செய்து எண்களின் கூட்டல் விடைகளைச் சரிபார்த்தல்.

3. கம்பி மணிச்சட்டத்தை உபயோகித்து எண்களின் கூட்டலைச் செய்தல். (ஒவ்வொரு கம்பியிலும் 9 மணிகளுக்கு மேல் இருத்தல் கூடாது என்பதை அறிதல்.)

**பிள்ளைகள் நினைவில் கொள்ள வேண்டுவன :**

1. ஒரே இடமதிப்புள்ள இலக்கங்களை ஒன்றின் கீழ் ஒன்றாக எழுதிய பின்னர் கூட்ட வேண்டும். முதலில் ஒன்றுகள் இடத்தில் தொடங்கிக் கூட்டுதல் வேண்டும்.

2. பத்து ஒன்றுகளை ஒரு பத்தாகவும், 10 பத்துக்களை ஒரு நூறாகவும் மாற்ற வேண்டும்.

3. எண்களை மேலிருந்து கீழாகவும் கூட்டலாம். கீழிருந்து மேலாகவும் கூட்டலாம். ஒரே விடைதான் கிடைக்கும்.

4. எந்த எண்ணுடன் பூச்சியத்தைக் கூட்டினாலும் அதே எண்தான் விடை வரும்.

5. பூச்சியத்துடன் எந்த எண்ணைக் கூட்டினாலும் அதே எண்தான் விடை வரும்.

## 3. கழித்தல்

கழித்தலுக்கும் கூட்டலுக்கும் உள்ள தொடர்பைப் பல எடுத்துக்காட்டுகள் மூலம் விளக்கவேண்டும். புளியங்கொட்டைகள், மணிகள், சோழிகள் போன்ற பொருள்களைப் பயன்படுத்திச் செய்முறைக் கணக்குகள் மூலம் கழித்தல் பற்றிய கருத்தை மாணாக்கர்கள் நன்றாகப் புரிந்துகொள்ளும்படி செய்யவேண்டும்.

கணிதக் கணக்குகளின் தீர்வு காணும் முறையில் 'விடை சரி பார்த்தல்' என்பது மிக முக்கியமானது. எனவே, கழித்து வந்த விடை சரியா என்று பார்ப்பதற்குக் கூட்டல் கழித்தல்களின் தொடர்பைப் பற்றிய கருத்தைப் பயன்படுத்தவும்.

(எ. கா.)

$$\begin{array}{r} 9 \\ -\ 2 \\ \hline 7 \\ \hline \end{array} \qquad \begin{array}{r} 7 \\ +\ 2 \\ \hline 9 \\ \hline \end{array}$$

அதாவது ஒன்பதிலிருந்து இரண்டைக் கழிக்க ஏழு கிடைக்கின்றது. இந்த ஏழுடன் இரண்டைக் கூட்ட ஒன்பது கிடைக்கின்றதல்லவா? எனவே நம் விடை சரியென்றாகின்றது.

ஓர் எளிய கணிதக் கருவியைச் செய்து மாணவர்களுக்கு விளக்கலாம்.

ஒரு மெல்லிய அட்டையைக் (card board) கீழ்க் காட்டியவாறு வெட்டியெடுத்து எண்களை எழுதிக்கொள்ளவும்.







(அ) அட்டையில் AP அளவு அகலம், (ஆ) அட்டையில் RC அளவு அகலம் இருக்கவேண்டும். இரு அட்டைகளிலும் பிரிவீடுகள் சமமாக இருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக (அ) வில் 1 செமீ அளவு 1 அலகைக் குறித்தால் (ஆ) வில் 1 செமீ அளவு 1 அலகைத்தான் குறிக்கவேண்டும்.

பின்னர் (அ) ஐ (ஆ) வின் மீது கீழ்க்கண்டபடி A, Bயில் மடித்து (ஆ) வின் மீது நழுவும்படி செய்யவேண்டும்.




| | | | |
|---|---|---|---|
| 15 | 13 | 7 | 5 |
| − 12 | − 10 | − 4 | − 2 |
| 3 | 3 | 3 | 3 |

என்று விடைகள் கிடைக்கப்பெறுவதைக் காணலாம்.

எடுத்துக்காட்டாக 11லிருந்து 5ஐக் கழிக்கவேண்டும் எனில் (ஆ) வில் உள்ள 11ஐ (ஆ) வில் உள்ள 5க்கு நேரே கொணர்ந்தால் விடைக்கு எதிரே (அ)வில் 6 கிடைப்பதைக் காணலாம்.

## மற்றொரு துணைக்கருவி

கீழ்க்கண்டவாறு ஒரு மெல்லிய அட்டையில் சம அளவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றாகக் குறைத்து எழுதிக்கொண்டே வந்து 1-ல் முடிக்கவும்.

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 14 | 13 | 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | |



(i)



(ii)



(iii)

மேற்கண்ட படங்களில் உள்ளவாறு மெல்லிய அட்டையில் பிளேடால் படம் 1-ல் A, B என்ற இடங்களில் செங்குத்தாக வெட்டவும். A B என்ற இடவெளி படம் (i)ல் உள்ள ஓர் அலகைக் குறிக்கும் இடைவெளியைப் போல் மூன்று மடங்காக இருக்க வேண்டும்.

படம் (ii)-ல் CD 4 மடங்காகவும்

படம் (iii)-ல் EF 6 மடங்காகவும் இருக்க வேண்டும்.




$$\begin{array}{r} 11 \\ -\ 3 \\ \hline 8 \end{array}$$

என்பதற்கு விளக்கம் கிடைக்கின்றது. இம்மாதிரியே எந்த எண்ணைக் கழிக்க வேண்டுமோ அந்த எண் படம் (i), (ii), (iii)இல் உள்ளது போல் செய்துகொண்டு விளக்கலாம்.

ஓர் எண்ணிலிருந்து அதே எண்ணைக் கழித்தல், ஓர் எண்ணிலிருந்து பூச்சியத்தைக் கழித்தல் பற்றிய உண்மைகளைப் புளியங்கொட்டைகள், மணிகள், சோழிகள் போன்ற பொருட்களைக் கொண்டு நன்கு விளக்கவும். அமைப்பு அல்லது சீர் (Pattern) முறை மிகவும் முக்கியமானது. இம்முறையில் மாணாக்கர் தாமே கணித உண்மைகளைக் கண்டறிய வாய்ப்புள்ளது.

# 4. பெருக்கல்

1. சம எண்ணிக்கை கொண்ட புளியங்கொட்டைகளைச் (சோழிகள்) சிறு சிறு கூறுகளாகக் குவித்து அவற்றிலிருந்து பெருக்கல் வாய்பாட்டைக் காணலாம்.

சிறு குச்சிகளைச் சம எண்ணிக்கை கொண்டவைகளாகக் கட்டியும் பெருக்கல்களைக் காணலாம். எடுத்துக்காட்டாக,



மூன்று மூன்றாக ஐந்து கட்டுகள் உள்ளன.

மொத்த எண்ணிக்கை $3+3+3+3+3 = 5 \times 3 = 15$.

2. புள்ளியைக்கொண்டு அணிக் கோலங்களை அமைத்துப் பெருக்கலை விளக்கலாம். எடுத்துக்காட்டாக




இதில் வரிசைக்கு 5 புள்ளிகள் வீதம் 4 வரிசைகள் உள்ளன. எனவே மொத்தப் புள்ளிகளின் எண்ணிச்கை $4 \times 5 = 20$.




இதில் வரிசைக்கு 4 புள்ளிகள் வீதம் 5 வரிசைகள் உள்ளன. எனவே மொத்தப் புள்ளிகளின் எண்ணிக்கை $5 \times 4 = 20$.

இங்கு இன்னும் ஒரு பண்பை விளக்கலாம்.

பெருக்கலில், எண்களை எந்த அமைப்பிலும் எழுதிப் பெருக்கலாம் என்ற உண்மையை மிக எளிதாக விளக்கலாம்.

3. ஒரு பல்லாங்குழியில் ஒவ்வொரு குழியிலும் ஒரே எண்ணிக்கையுள்ள சோழிகளைப் போட்டு அவற்றை எண்ணிப் பார்த்து வாய்பாடு அட்டவணையைச் சரிபார்க்கலாம்.




4. வெவ்வேறு ஆரங்களுள்ள மூன்று வட்ட அட்டைகளைக் கத்தரித்து எடுத்துக் கொள்ளவும். மையங்களைப் பொருந்தும்படிச் செய்து குண்டூசியில் சொருகி மடக்கி விடவும். மிகச் சிறிய வட்ட அட்டையின் நடுவில் வாய்பாடு எண்ணைப் பெரிதாக எழுதிக் கொள்ளவும். இரண்டாவது அட்டை 10 சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளதைக் கவனியுங்கள். இதில் 1, 2, 3, ......, 10 என எழுதிக் கொள்ளவும். மிகப் பெரிய அட்டையையும் 10 சம பாகங்களாகப் பிரித்து அவற்றில் பெருக்கல் பலன்களை எழுதிக் கொள்ளவும்.

படத்தில் 2-ம் வாய்பாடு அமைக்கப்பெற்றுள்ளது. இம் மாதிரியே 3, 4, 5, 10 பெருக்கல் வாய்பாடுகளை அமைக்கலாம்.

5. கீழே கொடுத்துள்ளபடி பெருக்கல் வாய்பாடு அட்டவணையைத் தயார் செய்யலாம். இதை உபயோகிக்கும் முறையை மாணாக்கர்கள் நன்கு அறியும்படி பயிற்சி அளிக்க வேண்டும்.

| × | 0 | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|---|
| 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 1 | 0 | 1 | 2 | 3 | 4 | 5 |
| 2 | 0 | 2 | 4 | 6 | 8 | 10 |
| 3 | 0 | 3 | 6 | 9 | 12 | 15 |
| 4 | 0 | 4 | 8 | 12 | 16 | 20 |
| 5 | 0 | 5 | 10 | 15 | 20 | 25 |

6. செவ்வக அட்டைத் துண்டுகளில் கீழே கொடுத்துள்ளவாறு 2-ஆம் வாய்பாட்டின் ஒவ்வொரு பெருக்கல் கணக்கையும் எழுதவும்.

| | | |
|---|---|---|
| 2 × 2 | 5 × 2 | 10 × 2 |

இம்மாதிரியான பல அட்டைகளை ஒரு பெட்டியில் போடவும். அவற்றிற்குரிய சரியான விடைகளைக் கீழுள்ளபடி வேறு பல அட்டைகளில் குறிக்கவும்.

| | | |
|---|---|---|
| 4 | 10 | 20 |

இப்படிப்பட்ட அட்டைத் துண்டுகளை வேறு ஒரு பெட்டியில் வைத்துக்கொள்ளவும்.

முதல் பெட்டியிலிருந்து ஓர் அட்டைத் துண்டை எடுத்து, அதற்குரிய சரியான விடையுள்ள அட்டைத் துண்டை மற்ற பெட்டியிலிருந்து தெரிந்து எடுக்கச் சொல்லவும். இம்முறையால் விளையாட்டு முறையில் கணிதக் கருத்துக்களை மாணாக்கர் அறிந்து கொள்வர்.

**பிள்ளைகள் நினைவில் கொள்ள வேண்டுவன :**

1. ஒரே எண்ணின் தொடர் கூட்டல்தான் பெருக்கல் ஆகும்.

2. ஓர் எண்ணை 1-ல் பெருக்கினாலும், 1-ஐ ஓர் எண்ணால் பெருக்கினாலும் அதே எண்தான் விடையாகக் கிடைக்கும்.

3. ஓர் எண்ணை 0ஆல் பெருக்கினாலும், 0-ஐ ஓர் எண்ணால் பெருக்கினாலும் விடை 0 தான்.

4. சுருக்கு முறையில் ஓர் எண்ணைப் பத்தால் பெருக்க அந்த எண்ணின் வலப் பக்கத்தில் ஒரு பூச்சியம் சேர்க்க வேண்டும்.

5. பெருக்கல் கணக்கில் எண்களை எந்த ஒழுங்கில் பெருக்கினாலும் ஒரே விடை தான் வரும்.

(உம்.) $2 \times 10 = 20$

$10 \times 2 = 20$

## 5. பின்ன எண்கள்

பல அளவுகளில் வட்டம், சதுரம், செவ்வகம் உருவங்களைக் காகிதத்தில் வெட்டி வைத்துக் கொள்ளவேண்டும். சிறுவர்களிடம் ஒவ்வொரு உருவத்தையும் கொடுத்து அதில் அரைப் பாகம், கால் பாகம், முக்கால் பாகம் மடித்துக் காட்டச் சொல்லவும். இவற்றின் மூலம் கீழ்க் குறித்த உண்மைகளை மாணவர்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.

1. ஒரு முழுப் பொருளை 2 அரைப் பாகங்களாகப் பிரிக்கலாம்.
2. ஒரு முழுப் பொருளில் அரைப் பாகம் போக மீதி இருப்பது அரைப் பாகம்.
3. 2 அரைப் பாகங்கள் சேர்ந்தது ஒரு முழுப் பொருள்.
4. ஒரு முழுப் பொருளை 4 கால் பாகங்களாகப் பிரிக்கலாம்.
5. ஒரு முழுப் பொருளில் 3 கால் பாகங்கள் சேர்ந்தது முக்கால் பாகம்.
6. ஒரு முழுப் பொருளில் கால் பாகம் நீக்கினால் மீதி இருப்பது முக்கால் பாகம்.
7. கால் பாகமும் முக்கால் பாகமும் சேர்ந்தது ஒரு முழுப் பொருள்.
8. 2 கால் பாகங்கள் சேர்ந்தால் கிடைப்பது அரைப் பாகம்.

## 6. நாணயங்கள்

புழக்கத்திலுள்ள நாணயங்களையும், நோட்டுக்களையும் மாணவர்களுக்குக் காட்டவும். நாணயங்களின் ஒவ்வொரு புறத்திலும் என்னென்ன குறிக்கப்பட்டுள்ளன என்று மாணவர்களைக் கவனிக்கச் சொல்லவும். இதே போன்று நோட்டுகளின் மேலும் என்னென்ன அச்சிடப் பட்டுள்ளன என்று கவனிக்கச் சொல்லவும்.

அட்டை நாணயங்கள் தயாரித்துச் சில்லறை மாற்றவும், கடை விளையாட்டுக்குப் பயன்படுத்தவும். சில்லறை கொடுக்கும் போது பல முறைகளில் கொடுக்கலாம் என்பதை மாணவர் உணர வேண்டும்.

(உ.ம்) 5 பைசா கொடுக்க ஒரு 5 பைசா நாணயம் அல்லது
ஒரு 3 பைசா, ஒரு 2 பைசா அல்லது
ஒரு 3 பைசா, 2 ஒரு பைசாக்கள் அல்லது
2 இரண்டு பைசாக்கள், 1 ஒரு பைசா அல்லது
1 இரண்டு பைசா, 3 ஒரு பைசாக்கள் அல்லது
5 ஒரு பைசாக்கள்

இவ்வாறு கொடுப்பதில் குறைந்த எண்ணிக்கை நாணயங்களாகக் கொடுப்பது ஒரு 5 பைசா நாணயம் என்பதை மாணவர்கள் அறிய வேண்டும். குறைந்த எண்ணிக்கை நாணயங்களாகச் சில்லறை கொடுக்கும் பழக்கம் ஏற்படுமாறு செய்யவேண்டும்.

## 7. அளவைகள்

**கால அளவு :**

அட்டைக் கடிகாரத்தில் முட்களை அமைத்து மாணவர்கள் பழகுவதற்குக் கொடுக்கவும். முட்களைத் திருப்பித் தேவையான மணியைக் காட்டச் சொல்லவும். பின்வருவனவற்றை மாணவர்கள் உணரும்படிச் செய்யவும்.

1. முழு மணி காட்டும்போது பெரிய முள் 12-ல் இருக்கும். சிறிய முள் எத்தனை மணியோ அதைக் குறிக்கும் எண்ணில் இருக்கும்.
2. அரை மணி காட்டும்போது பெரிய முள் 6-ல் இருக்கும், சிறிய முள் எத்தனை மணி முடிந்ததோ அதைக் குறிக்கும் எண்ணுக்கும் அடுத்த எண்ணுக்கும் இடையில் இருக்கும்.
3. கால் மணி காட்டும் போது பெரிய முள் 3-இல் இருக்கும், சிறிய முள் எத்தனை மணி முடிந்ததோ அதைக் குறிக்கும் எண்ணைத் தாண்டிச் சிறிது தள்ளி இருக்கும்.

